உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவஜயம்

# திருஞானசம்பந்தர்

**கே. ஸரஸ்வதி, திருநெல்வேலி - 7**

சிவஞான பூஜா மலர் குரோதன ஆண்டு - (1985)
பிரசுரம்: **ஆங்கீரஸ s. வேங்கடேச சர்மா**, மேலமாம்பலம், சென்னை - 600 033]

எல்லாம் வல்ல எம்பிரான், உமையொரு பாகனான அர்த்தநாரீச்வரர். தன்னை வணங்குபவர்களுக்கு சகல வல்லமைகளையும் அளிக்க வல்லவன். இவ்வாறு அவனைப் பணிந்து அருள் பெற்ற அருளாளர்கள், அவ்வல்லமையை எம்பெருமானின் கருணையே என நினைக்கும் அளவில் அத்திறன் பெருகும். அஃதன்றி இது தன் ஒரே முயற்சியினால் கிடைத்த பேறு என்று இறுமாந்து போகும் அளவில் அடுத்த நொடியிலேயே அவ்வல்லமையெல்லாம் மறையும் அளவிற்கு சூழ்நிலையினை ஏற்படுத்தி, தன் நிலைத்தன்மையினையும், உலகின் நிலையாத் தன்மையினையும், உணர வைத்துவிடும் காரண கர்த்தாவாகி விடுகிறான்.

பக்த பிரஹ்லாதனால் நாராயண! நாராயணா! என்று அவரது தாமத்தை பூவுலகில் நிலைநாட்டச் செய்த காலம் ஒன்று. ஆனால் அந்நாராயண நாமத்திற்கு அதிபதியை பின்னொரு நாள் சம்ஹரித்து அவர் தோலைச் சட்டையாகத் தரித்து 'சட்டைநாதராக' சிவபிரான் சீர்காழியில் காட்சி அளிக்கும் காலமும் ஒன்று. காரணம் ஏன்? எல்லாச் சக்திக்கும் காரணமான சிவபெருமானை - எல்லாம் வல்லவனை நாராயணர் தற்பெருமையால் மறந்ததே. ஆயினும் படைத்த எம்பிரான் தன் குழந்தைகளுக்கு அறிவைக் கொடுத்துத் தன் நிலைத்த தன்மையை உணர்த்தி அருள் புரிபவனாகிறான். அவ்வறிவினை - ஞானத்தைப் பெறும் வரை - அந்தச் சரணாகதி எனும் நிலையை - தன் குழந்தைகள் உணரும் வரை அவர்கட்கு பெருமையுடன் சிறுமைகளையும் வழங்கிக் கொண்டேதான் இருப்பான். இங்கு பெருமை சிறுமை என்று கூறியது இன்பங்களுக்கும், துன்பங்களுக்கும் காரணமானவை.

பக்த பிரஹ்லாதனின் தந்தையான இரணியன் ஆண்டாண்டு காலமாகத் தவமியற்றினான். இறைவன் அவன் தவத்திற்கிரங்கி முன் தோன்றி, வேண்டும் வரம் யாது? என வினவினார். தனக்கு 'இறவா வரம் வேண்டும்' எனும் நோக்கத்துடன், தனது முடிவு மனிதனாலோ, தேவராலோ, மிடுகத்தாலோ சம்பவிக்கக் கூடாததாகவும், இல்லினுள்ளோ, வெளியிலோ, இல்லாததாகவும்,

இரவிலோ பகலிலோ நிகழாததாகவும், நீரிலோ நிலத்திலோ இல்லாததாகவும் எந்த ஆயுதத்தினாலும் சம்ஹரிக்க இயலாததாகவும், இருக்க வேண்டும் என்று வரம் கோருகிறான். எம்பெருமானும் அருள் பாலிக்கிறார். பகதர்களுக்கு அருளுவது அவரது கருணை, ஆனால் அக்கருணையாளனின் கருணையை மனதில் நிறுத்தி எக்காரியத்தையும் செய்யின் சிறப்புற்று விளங்கும். அஃதன்றி இரணியன் தான் பெற்ற வரத்தினால் அடைந்த பயன் யாது? அக்கருணையாளனின் வெறுப்பிற்கே ஆளாகும் வண்ணம் தன் சிந்தனையைச் செலுத்தி விட்டான். இறவா வரம் பெற்று விட்டோம் என்ற எண்ணி, அவ்வரத்தைப் பெற்ற காரணத்தினால் 'தானே நிலை' என்ற எண்ணம் ஏற்பட்டு தன்னை வணங்குபடி மக்களை துன்புறுத்துபவனாகி, அவ்வரம் தந்த ஈசனையே மறந்தவனானான்.

மக்கள் துன்பத்தினை துடைக்கும்படி இறைவனை வேண்ட, சிவனின் சக்தியான நாராயணர் அவனை சம்ஹரிக்கும் நேரம் வருகிறது. ஆயினும் கொடுத்த வரத்தினின்றும் மீறுவது நியதியன்று. ஆகையால், அவன் கேட்ட வரத்தின்படியே மனிதனாகவோ, மிருகமாகவோ அல்லாத ஒர் அவதாரமான 'நரசிம்மனாகத்' தோன்றி, இல்லினும் வெளியிலும் இல்லாத இடைப்பட்ட 'நொலை'யில் பகலும் இரவும் இல்லாத 'சந்தியா' வேளையில் எவ்வித ஆயுதமுமின்றி தன் விரல் நகங்களை ஆயுதமாகக் கொண்டு நீரிலும் நிலத்திலுமன்றி தன் மடியில் கிடத்தி அவனது உடலை கிழித்து குடலை மாலையாக அண்கிறார். மனித சக்தியினால், புத்தியினால் நினைக்க இயலாத ஒரு அவதாரம். அந்நாராயணரையே - காத்தல் தெய்வமான திருமாலையே சம்ஹரித்துக் தோலைச் சட்டையாகத் தரித்து 'சட்டைநாதராக' சீர்காழியில் சிவபெருமான் காட்சியளிக்கிறார் என்றால் 'எல்லாம் வல்லவன் சிவனே' என்பதற்கு வேறு சான்றும் தேவையோ?

இது போன்ற நிகழ்ச்சிகளைக் காட்டி மனிதனை அதில் லயிக்க வைத்து, பக்குவமடையச் செய்து நிலையான சிவத்தின் மேல் மனதை நிலைநிறுத்தி அவன் நாமமே சிந்தை செய்ய வைப்பதே உலகப்படைப்பின் சாராம்சம் ஆகும். உலகில் மக்கள் எனும் மாணக்கர்க்ளுக்கு ஆண்டவனின் வல்லமையை உணர்த்தும் உபாத்தியாயர்களாக விளங்குவபவர்கள் திருமுறைகளை அருளிச் செய்த ஆசிரியர்களாவார்கள். இவ்வாசிரியர்களின் பட்டியலில் முதலிடம் வகிப்பவர் ஞானசம்பந்தப் பெருமானாவார். இவரது புராணத்தைத் தெய்வச் சேக்கிழார் பெருமான் பின்வரும் பாடலால் தொடங்குகிறார்.

**வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்**
**பூதபுரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத**
**சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்**
**பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்**

இவரின் தந்தையார் சிவபாதஹிருதயர். பெயருக்கு ஏற்ப சிவனது பாதக்கமலங்களையே தனது நெஞ்சில் நிறுத்தி வைத்தவர். சைவம் நலிந்து மற்றைய மதம் தலைதூக்க இருந்த நேரம், எம்பெருமானை வேண்டி, சைவம் தழைக்கப் பிரார்த்திக்க, உண்மை பகதர்களுக்கு இரங்கும் குணாளனாகிய ஈசன் சிவபாதஹிருதயருக்கும் பகவதி அம்மையாருக்கும் ஞானசம்பந்தரைப் புதல்வராகச் சித்திரை மாதத்து திருவாதிரை நன்னாளில் அவதரிக்கச் செய்கிறார். அவர் அவதரித்த தலமான சீர்காழிப்பதியில் அம்மை அப்பர் சந்நிதிகளுக்கு இடையில் ஞானசம்பந்தர் சந்நிதி அமைக்கப்பட்டுள்ளது சோமாஸ்கந்த ரூபத்தைக் குறிப்பதாகும். ஞானசம்பந்தரை சுப்ரமண்யர் அம்சமாகவும் வழிபடுவது ஐதிகமானது இங்கு குறிப்பிடத்தக்கது. திருஞானசம்பந்தரது திருவவதாரத்தைக் கூறும் பெரிய புராணப்பாடல் இதோ காண்மின்.

**அவம்பெருக்கும் புல்லறிவின் அமண்முதலாம் பரசமயப்**
**பவம் பெருக்கும் புரைநெறிகள் பாழ்படநல் லூழிதொறும்**
**தவம் பெருக்கும் சண்பையிலே தாவில்சரா சரங்களெலாம்**
**சிவம் பெருக்கும் பிஉளையார் திருஅவதா ரஞ்செய்தார்.**

# சீர்காழிப் பதியின் பெருமை

பேரூழிகாலத்து உலகம் கடலால் சூழப்பட்ட பொழுது எம்பெருமான் அறுபத்து நான்கு கலைகளையும் ஆடையாக உடுத்தி “ஓம்” எனும் பிரணவதோணியில் அம்மை அப்பனாக எழுந்தருளி வந்தபொழுது அந்த ஊழியிலும் அழியாத இத்தலமே மூலமென்று தங்கினார். ஆகையினால் “திருத்தோணிபுரம்” என்றும் இத்தலம் அழைக்கப்படுகிறது. இத்தலத்திற்குரிய பன்னிரு பெயர்களையும் அதன் காரணங்களையும் பல்பெயர்ப் பத்து எனும் தக்கேசிப்பண்ணில் அமைந்த திருப்பிரமபுரப்பதிகத்தில் விளக்குகிறார் ஞானசம்பந்தர்.

அவை பின்வருமாறு: -

1. **பிரமபுரம்** - பிரமன் வழிபாடு செய்து உய்ந்த காரணத்தால் பெற்ற பெயர்.
2. **வேணுபுரம்** - (வேணு - மூங்கில்) இந்திரன் சூரபத்மனுக்கு அஞ்சி இறைவனை பூஜிக்க இறைவன் மூங்கிலாய் முளைத்திருந்தமையின் வேணுபுரமாயிற்று.
3. **திருப்புகலி** - சூரபத்மனுக்கு அஞ்சிய தேவர்கள் அடைக்கலமாகப் புகுந்த இடமாதலால் புகலியாயிற்று.
4. **திருவெங்குரு** - (வெங்கோ - தருமன்) செங்கோல் ஏந்தி நல்லாட்சி நடத்திய இயமன் பல உயிர்கட்கும் செய்யும் ஆட்சியின் உண்மையை அறியப்படுத்த

இத்தலத்தில் இறைவரைப் பூசித்து அருள் பெற்றதால் வெங்குரு எனப் பெயர் வந்தது. சுக்கிரன் பூஜித்து தேவகுருவிற்கு இணையாகப் பேறு பெற்றமையாலும் இப்பெயர் உளதாயிற்று.

5. **தோணிபுரம்** - பிரணவத்தோணியில் எம்பெருமான் அம்மையுடன் வந்து தங்கிய இடமானதால் திருத்தோணிபுரம்.

6. **திருப்பூந்தராய்** - சங்கநிதி, பதுமதிநி என்ற இரு தெய்வங்கள் பூமாலையாய் இருந்து பூஜித்தமையாலும், ஆதிவராஹமான திருமால் தன் கொம்பில் பூமியை ஏற்று வருத்திய பழி நீங்கவும், இரணியனைக் கொன்ற பழி நீங்கவும் பூக்களைக் கொண்டு பூஜித்தமையாலும் இப்பெயர் பெற்றது.

7. **சிரபுரம்** - பாற்கடலினின்று கடைந்த அமுதத்தினை மோகினியான திருமாலிடமிருந்து தேவர்களுடன் கலந்து முறையின்றி உண்ட சிலம்பனின் சிரம் மோகினியான திருமாலால் வெட்டப்பட்டது. அத்தலை மாத்திரமான இராகு இத்தலத்தில் பூஜித்துப் பேறு பெற்றமையால் உண்டானது இப்பெயர்.

8. **புறவம்** - சிபிச்சக்கரவர்த்தியின் தசையினால் வாழ்வு பெற்ற புறா அப்பாவம் போக்க வழிபட்ட தலம். கௌதம் முனிவர் சாபத்தால் புறா வடிவு பெற்ற பிரசாபதி முனிவன் பூஜித்துப் பெற்ற தலமுமாம்.

9. **சீர்காழி** - காளிதன் எனும் பாம்பும், நடனத்தில் தோல்வியடைந்த காளியும் பூஜித்துப் பேறு பெற்ற தலமாதலால் உண்டானது இப்பெயர்.

10. **சண்பைநகர்** - துருவாச முனிவர் சாபத்தால் சண்பைக் காடொன்று தோன்ற அப்புற்களையே ஆயுதமாகக் கொண்டு யாதவகுமாரர் போர் செய்து மடிய அப்பழி நீங்க துருவாசர் பூஜித்துப் பேறு பெற்றதால் இப்பெயர் பெற்றது.

11. **கொச்சைவயம்** - பராசரர் மச்சகந்தியைக் கூடியதால் ஏற்பட்ட நாற்றம் நீங்கும்படி பூஜித்துப் பேறு பெற்றமையால் இப்பெயர் உண்டாயிற்று. (கொச்சை - நாற்றம்)

12. **கழுமலம்** - உரோமச முனிவர் வழிபட்டு உயிர்கள் மலங்கழுவும் வரம் பெற்றமையால் கழுமலம் என்ற பெயர் பெற்றது. இப்பன்னிரு பெயர்களையும் முறையே தொகுத்துக் கூறும் பெரியபுராணப் பாடலைக் காண்க.

**பிரமபுரம் வேணுபுரம் புகலிபெரு வெங்குருநீர்ப்**
**பொருவில்திருத் தோணிபுரம் பூந்தராய் சிரபுரமுன்**
**வருபுறவஞ் சண்பைநகர் வளர்காழி கொச்சைவயம்**
**பரவுதிருக் கழுமலமாம் பன்னிரண்டு திருப்பெயர்த்தால்.**

இவ்வாறு பல காரணப்பெயர்களைக் கொண்ட திருத்தலத்தில் அவதரித்த ஞானசம்பந்தரின் அவதார தினத்தைக் கொண்டாட, அவர் இல்லத்தில் ஏற்பாடாகிக் கொண்டிருக்கும் வேளையில், சிவபாதஹிருதயர் திருக்குளத்திற்கு நீராடச் செல்கின்றார். பிள்ளையார் தானும் வருவேன் என அடம்பிடித்து உடன் செல்ல, அவரைக் குளக்கரையில் நிறுத்தி விட்டு நீரினுள் இறங்கி அகமர்ஷண மந்திரத்தை மனதில் நிறுத்தி நீரினும் மூழ்கியதும் தந்தையைக் காணாத குழந்தை, 'அம்மே' 'அப்பா' என அழத்தொடங்குகிறது. குழந்தையின் அருளை உலகம் அறியும் காலம் வந்து விட்டதாலும், தம் பக்தரான சிவபாதஹிருதயரின் வேண்டுகோளை நிறைவேற்றும் வேளை வந்து விட்டதாலும், சிவபெருமான் அம்மையுடன் இடப வாகனத்தில் தோன்றிப் பிள்ளையின் அழுகையை நிறுத்தும் பொருட்டும், பிள்ளை சிவஞானம் பெறும் பொருட்டும், அம்மையை நோக்கிப் 'பொற்கிண்ணத்தில் முலைப்பாலைக் கறந்தூட்டுக' என ஆணையிடுகிறார். விநாயகரும், முருகரும் வாய் வைத்து அருந்தாத முலையையுடைய அம்மை (இக்காரணம் பற்றியே திருவண்ணாமலையில் 'உண்ணாமலை அம்மை' என அழைக்கப்படுகிறார்) சம்பந்தருக்குப் பாலை சிவஞானத்தோடு குழைத்து பொற்கிண்ணத்தில் ஏந்தி அருந்தக் கொடுக்கிறார்.

இங்ஙனம் அம்மையப்பரால் பால்கொடுத்து ஆட்கொள்ளப்பட்டதால் இவருக்கு ஆளுடைய பிள்ளையார் என்னும் நாமமும் ஞானசம்பந்தர் எனும் நாமமும் வழங்கலாயிற்று.

**யாவருக்குந் தந்தைதாய் எனுமிவரிப் படிஅளித்தார்**
**ஆவதனால் ஆளுடைய பிள்ளையா ராய்அகில**
**தேவருக்கும் முனிவருக்குந் தெரிவரிய பொருளாகும்**
**தாவில்தனிச் சிவஞான சம்பந்த ராயினார்.**

இவர் பெற்ற ஞானத்தின் தன்மையையும் சிறப்பையும் பின்வரும் பெரியபுராணப்பாடல் தெளிவாக்குகின்றது.

**சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்**
**பவமதனை அறமாற்றும் பாங்கினிலோங் கியஞானம்**
**உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்**
**தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில்.**

நீராடி முடித்துக் கரையேறிய தந்தையார், பிள்ளையின் வாயில் பால் அருந்திய சுவட்டைக் கண்டு சிறுகோல் கொண்டு, "யார் கொடுத்த பாலை உண்டாய்" என கோபத்தோடு வினவுகிறார். குழந்தையை கண்டிப்பது பெற்றோரின் கடமையல்லவா! சிறுகுழந்தை யார் கொடுப்பினும், தன் அறியாமையால்

ஏற்றுக்கொண்டு விடும். அக்காரணத்தினால் பல தீங்குங்கள் நேரலாம். அதை அறிய வைப்பது பெற்றோரின் கடன். இதையே செய்ய எண்ணுகிறார் சிவபாதஹிருதயர். தந்தையின் கேள்விக்கு பாலறாவாயினரான சம்பந்தர் பதிலுரைக்கிறார். அவை ஓரிரு வரிகளில் அல்ல. தேமதுரத் தமிழில் பண்ணுடன் ஒரு திருப்பதிகமாக வெளி வருகிறது.

சேக்கிழார் பெருமான் தனது பெரியபுராணத்தில் ஞான சம்பந்தரைப்பற்றிக் குறிப்பிடுகையில் "தோ" என அவர் முதல் எழுத்தை கூறக் காரணம் விளக்கியுள்ளார். 'மறை முதல் மெய்யுடன் எடுத்தஃ எழுதுமறை' என்பதால், வேதம் பயின்ற மரபில் வந்து தமிழ் வேதம் தந்த இவர், காயத்திரி மந்திரத்தின் முதல் எழுத்தாகிய தகரத்தின் மீது (தத்ஸவிதூர்வரேண்யம்) பிரணவத்தின் முதலெழுத்தை (ஓம்) சேர்த்து தொடங்கியிருப்பது அறிந்து இன்புறத்தக்கது. இதை வெள்ளைவாரணர் தனது பன்னிரு திருமுறையில் தமிழ் என்பதின் தகரத்துடன் ஓம் எனும் பிரணவத்தைச் சேர்த்து 'தோ' எனச் சம்பந்தர் தொடங்கியுள்ளார் எனக்குறிப்பிடுவதும் இன்புறத்தக்கதே. இதில் 'தோடு' என ஆரம்பிக்கும் காரணம் பிள்ளையாரின் அழுகை ஒலி எம்பெருமானின் செவியில் நுகரப் பெற்று, அம்மையிடம் பாலைக் கொடுக்கும்படி ஆணையிட்டதாலும், அந்தக்கருணைக்கு இருப்பிடமான பெண் பாகத்திற்கு உரியது தோடு என்பதாலும், அதை முன்னே வைத்துப் பாடினார். சம்பந்தர் இவ்விளவயதிலேயே சன்மார்க்க நெறிகளில் நாயக - நாயகி பாவத்தில் சிவபிரானை 'என் உள்ளம் கவர் கள்வன்' எனப்பாடுவதில் பக்தியின் தீவிரம் வெளிப்படுகிறது. 'கள்வன்' என்பது, இவ்வுலக உயிர்கள் தோறும் மறைந்திருந்து இன்ப துன்பங்களை அனுபவிக்கச் செய்வதால் அவ்வாறு அமைக்கிறார். அவர், இடபவாகனத்தில் ஏறி வந்ததனால் 'விடை ஏறியோன்' என்கிறார். 'துவெண்மதி' என்பது களங்கமில்லாத மதிரைக் குறிப்பிடுகிறது. வெண்மையே களங்கமில்லாததற்கு அடையாளம், 'காடுடைய சுடலைப்பொடிப் பூசி' என்று வருவது சுடுகாட்டில் உள்ள சாம்பலைப் பூசியவன் என்பதாகும். உலகில், 'ஒருகாலத்தில் எல்லாம் சாம்பலாகவே இம்மண்ணில் முடிய வேண்டும்' எனும் தன்மையை வெளிக்காட்ட இவ்வுடலில் சாம்பலைப் பூசியிருப்பவன். இதுவே திருநீற்றின் விளக்கமும். உலக உயிர்களின் நிலையாமையையும், சிவத்தின் நிலைத்த தன்மையையும் உணர்த்துவது திருநீறாகும். திருநீற்றைப் போற்றியே சம்பந்தர் பெருமான், 'திருவால வாய்ப்பதிக' த்தில் பாடியுள்ளார். ('திருமந்திரம்' பாடிய திருமூலரும், தனது மூவாயிரம் பாடல்களில் முத்துப்போன்று ஒரே பாடலில் திருநீற்றின் பெருமைகளை விவரிக்கிறார்.) 'ஏடுடைய மலரான் முனை நாட்பணிந்து ஏத்த அருள் செய்த' என்பது "பல இதழ்கள் உடையமலரால் நான் உன்னை முன் பணிந்ததால் இவ்வருள் செய்தவாறு" எனப்தாகும். 'பீடுடைய பிரமாபுரமேவிய பெம்மான் இவனன்றே' என்பது, பல பெருமைகளை தன்னிடத்தில் பெற்ற

பிரமாபுரத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் அன்றோ (தனக்குப் பாலைப்புகட்டியவன் என்கிறார்.)

**தோடுடையசெவி யன் விடையேறியோர் தூவெண்மதிசூடிக்**
**காடுடையசுட லைப்பொடுபூசியென் னுள்ளங்கவர்கள்வன்**
**ஏடுடையமல ரான்முனைநாட்பணிந் தேத்தவருள்செய்த**
**பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.**

இவ்வாறே இரண்டாவது பாடலில் முற்றிய ஆமை ஓட்டையும், இளமையான நாகத்தையும், பன்றியின் கூரிய கொம்பு ஆகியவற்றையும் அணிந்து, உலர்ந்து போன மண்டையோட்டை பாத்திரமாக ஏந்தி, அதில் பிச்சையேற்று எனது உள்ளத்தைக் கவர்ந்த கள்வன் யான் எனின், உலக நூலகளைக்கற்று, கேட்டு அடங்கி அவ்வாறே இறைவன் புகழையன்றி மற்றதைக் கல்லாத பெரியோர்களாலேயே தொழுதற்கு உரியவனானவனும் ('கல்லார் நெஞ்சில் நில்லான் ஈசன்' கற்றவர்கள் உண்ணுங்கனியே போற்றி' எனும் வாக்கியங்கள் இங்கு ஒப்பு நோக்க வல்லன) இப்படிப்பட்ட கற்றல், கேட்டல், நிற்றலான வழியில் செல்பவர்க்கு அருள் புரிபவனும் இடபவாகனத்தில் ஏறி பிரமபுரத்தில் மேவி இருப்பவனும் ஆகும் என்கிறார்.

**முற்றலாமையின் நாகமோடேன முளைக்கொம்பவைபூண்டு**
**வற்றலோடுகல னாப்பலிதேர்ந்தென துள்ளங்கவர்கள்வன்**
**கற்றல்கேட்டலுடை யார்பெரியார்கழல் கையால்தொழுதேத்தப்**
**பெற்றம்ஊர்ந்தபிர மாபுரம்மேவிய பெம்மானிவனன்றே.**

மூன்றாவது பாடலில் நீர் நிறைந்து கங்கை நதியைத் தாங்கியுள்ள சடையும் ஒளி பொருந்திய வெண் மதியையும் சூடிக் கையில் அடுக்கப்பட்ட வளையல்கள் கழன்று விடும்படியாக மனதைக் கொள்ளைக் கொண்ட கள்வன் யாவன் எனின், தலங்கள் பலஉள்ள இப்பூமியில் ஒப்பற்ற உயர்ந்த பதி என்று புகழ் பெற்ற பிரமாபுரத்தில் உறைகின்ற பெருமானே ஆவான்.

**நீர்பரந்தநிமிர் புன்சடைமேலோர் நிலாவெண்மதிசூடி**
**ஏர்பரந்தவின வெள்வளைசோரவென் னுள்ளங்கவர்கள்வன்**
**ஊர்பரந்தவுல கின்முதலாகிய வோரூரி துவென்னப்**
**பேர்பரந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.**

நான்காம் பாடலில் விண்ணில் செருக்குடன் திரிந்த பொன் வெள்ளி இரும்பாலாகிய மதில்களை, மேருவை வில்லாக்கி, ஆதிசேஷனை நாணாக்கி எய்து துளைத்தது மட்டுமின்றி, பிரமம் கபாலத்தில் பிச்சை ஏற்று வந்து என் உள்ளத்தினைக் கொள்ளைகொண்ட கள்வன் யாவன் எனில் பாம்பும் கொன்றை

மலரும் விளங்கும் மார்பினராய், இடப்பாகத்தில் உமை அம்மையும் வைத்து இப்பிரமபுரத்தில் மகிழ்ச்சியுடனிருக்கும் பெரும்மானேயாவான் என்கிறார்.

**விண்மகிழ்ந்தமதி லெய்ததுமன்றி விளங்குதலையோட்டில்**
**உண்மகிழ்ந்து பலிதேரியவந்தென துள்ளங்கவர்கள்வன்**
**மண்மகிழ்ந்தவர வம்மலர்க்கொன்றை மலிந்தவரைமார்பிற்**
**பெண்மகிழ்ந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.**

ஐந்தாவது பாடலில் பெண்ணொரு பாகத்தை உடையயன், சடைமுடியுடையவன், எருதின்மீது வீற்றிருந்து பவனி வருபவன், யாவராலும் போற்றப்படுபவன். அவ்வாறு அமர்ந்து என் உள்ளத்தைக் கொள்ளைக் கொண்டவன், ஒரு காலத்தில் கடலால் சூழப்பட்டும் அழியாது தோணிபோல் மிதந்து தோணிபுரம் எனப் பெயர் பெற்ற பிரமபுரத்தில் மேவிய பெம்மான் இவன்தான் என்கிறார்.

**ஒருமைபெண்மையுடை யன்சடையன்விடை யூரும்மிவனென்ன**
**அருமையாகவுரை செய்யவமர்ந்தென துள்ளங்கவர்கள்வன்**
**கருமைபெற்றகடல் கொள்ளமிதந்ததோர் காலம்மிது வென்னப்**
**பெருமைபெற்றபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.**

ஆறாவது பாடலில் ஒலி உருவாகிய வேதங்களை ஓதுதலை உடையவராயிருப்பதுடன், திருக்கூத்தினையும் உடையவராயும், தவறிழைத்தாரைக் தண்டிப்பதற்க்கா ஏந்திய மழு என்ற தீப்பிழம்பகிய ஆயுதத்தை ஏந்தியவரும், என் முன் கையில் செறிந்து கலந்திருந்த சங்கு வளையல்கள் கழன்று விழுமாறு (உடம்பு) நனி கருங்கல் எனும் மெய்ப்பாடு உணர்த்தியவாறு) என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டவன், மணம் மிகுந்ததுமான பொழில்கலடர்ந்தும் நீண்டும் உயர்ந்த சோலைகளிடத்து தன் ஒளிக்கிரணங்களைச் சிந்தும் சந்திரன் தவழும் பிரமபுரத்தை விரும்பி உறைகின்ற பெருமானாகிய இவனே என்கிறார்.

**மறைகலந்தவொலி பாடலோடாடல ராகிமழுவேந்தி**
**இறைகலந்தவின வெள்வளைசோரவென் னுள்ளங்கவர்கள்வன்**
**கறைகலந்தகடி யார் பொழினீடுயர் சோலைக்கதிர்சிந்தப்**
**பிறைகலந்தபிர மாபுரமேவிய பெம்மானி வனன்றே.**

ஏழாவது பாடலில் சடையில் கலந்திருக்கின்ற கங்கையையுடையவன், திருக்கரத்தில் அனலையுடையவன், ஆடையின் மேல் இறுகக்கட்டிய கச்சையாகிய பாம்பை உடையவன் ஊடத்தக்க பெண்ணும், அஞ்சத்தக்க எரி, அரவம் முதலியவற்றை அணிந்து திரிபவராயிருந்தும் என் உள்ளத்தைக் கவர்ந்தார் என்றது பெருமானின் பேரழகின் திறத்தையும், கருணையையும், எல்லா உயிரையும் பகை நீக்கியாளும் வன்மையையும் வியந்தவாறு. அப்பேர்ப்பட்ட பெம்மான் கடலோடு

கலக்கின்ற உப்பங்கழிகள் சூழ்ந்த குளிர்ந்த சோலைகளில் அழகிய பொன்நிறம் பொருந்திய சிறகுகளை உடைய அன்னங்கள் தங்கள் பெடைகளை தழுவுகின்ற இப்பிரமபுரத்தில் எழுந்தருளியவனாவான்.

**சடைமுயங்குபன லன்னலனெரி வீசிச்சதிர்வெய்த**
**உடைமுயங்குமர வோடுழிதந்தென துள்ளங்கவர்கள்வன்**
**கடன்முயங்குசுழி சூழ்குளிர்கானலம் பொன்னஞ்சிற கன்னம்**
**பெடைமுயங்குபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.**

இவ்வாறு முதல் ஏழு பாடல்களிலும், ஞானப்பால் கொடுத்த இறைவனது அடையாளங்களைக் கூறியபின் எட்டாவது, ஒன்பதாவது பாடலில், இம்மண்ணுலக மக்களும் தேவர்களும் தவறு செய்தும், பின் தம் தவறுகளுக்கு வருந்தி இறைவனைச் சரணடைந்தால், அவர் பெரும் கருணை காட்டி, ஆட்கொண்டு, அருள் செய்வார் என்பதை விளக்குகிறார்.

எட்டாவது பாடலில் திருக்கயிலாய மலையைப் பெயர்த்தெடுக்க விழைந்த இராவணனை அம்மலையின் அடியில் சிக்கவைத்து பின் அவன், தன் தவறுணர்ந்து, சிவபிரானைத் துதித்து சாமகானம் பாட, அவனுக்கு அருள் புரிந்தவரான எனது உள்ளத்தைக் கவர்ந்த கள்வன், துயர் விளங்கும் இப்பூமியில் ஊழியிலும் அழியாது புகழோடு விளங்கும் பிரம்மா புரத்தில் வீற்றிருக்கும் பெருமானே ஆவான் என்றவாறு.

**வியரிலங்குவரை யுந்தியதோன்களை வீரம்விளைவித்த**
**உயரிலங்கையரை யன்வலிசெற்றென துள்ளங்கவர்கள்வன்**
**துயரிலங்கும்முல கிற்பலவூழிகள் தோன்றும்பொழுதெல்லாம்**
**பெயரிலங்குபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.**

ஒன்பாவது பாடலில் பிரம்மாவும், திருமாலும் முறையே சிவபெருமானின் அடிமுடி காணும் பொருட்டு (அவ்வாறு காண்பவரே உயர்ந்தவர் என்ற எண்ணத்தைக் கொண்டு) தன் நிலைமைக்கும் கீழ்ப்பிறப்பான பறவை உருவமும், பன்றி உருவமும் எடுத்து தேடிச்செல்ல, அவர்களிருவரும் தோல்வியுற தீப்பிழம்பாக உயர்ந்து என் உள்ளத்தைக் கவர்ந்து நின்றவன். (பின் அவ்விருவரும் ஐந்தெழுத்தோதி பேறு பெற்றனர்) வானோர்களும், உலகத்தாரும் உயர்ந்து பேணும்படி, பிரம்மபுரத்தில் அமர்ந்திருக்கும் இப்பெருமானேயாம் என்றவாறு.

**தாணுதல்செய்திறை காணியமாலொடு தண்டாமரையானும்**
**நீணுதல்செய்தொழி யந்நிமிர்ந்தானென துள்ளங்கவர்கள்வன்**
**வாணுதல்செய்மக ளீர்முதலாகிய வையத்தவரேத்தப்**
**பேணுதல்செய்பிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.**

பத்தாவது பாடலில் புத்தரும் அறிவற்ற சமணரும் புறங்கூற, வேத நெறியில் நில்லாத உலகத்தார், அப்பழிக் கூற்றுக்கு ஏற்றவாறு தமக்குத் தோன்றியதைச் சொல்லவும் பிச்சையேற்று, எனது உள்ளத்தைக் கொள்ளை கொண்டவன், (யாவன் எனின்) மதம் பொருந்திய யானை வருந்த அதன் தோலை உரித்து 'இது என்ன மாயம் எனுமளவிற்கு' போர்த்தி கொண்டவரும், பித்தரைப் போன்றவருமான இப்பிரமபுரத்தில் மேவியிருக்கும் பெருமானேயாம்.

**புத்தரோடு பொறி யில்சமணும்புறங் கூறநெறிநில்லா**
**ஒத்தசொல்லஉல் கம்பலிதேர்ந்தென துள்ளங்கவர்கள்வன்**
**மத்தயானைமறு கல்வுரிபோர்த்ததோர் மாயம்மிதுவென்னப்**
**பித்தர்போலும்பிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.**

இவ்வாறு பத்துப்பாடல்களில் இறைவனைப் பற்றிய விவரங்கள் இன்னிசையுடன் பாடிய சம்பந்தர் கடைச்ப் பாடலான பதினொன்றாவதைத் திருக்கடைப்பாகப் பாடியுள்ளார். அதில் ஒருமைப்பட்ட மனத்துடன், மறைகளில் வல்ல பிரமனால் இறைவர் பூசையின் பொருட்டு உண்டாக்கப்பட்ட தாமரை மலர்கள் நிறைந்து விசாலமான பிரம்தீர்த்தம் எனும் பொய்கையையுடைய பிரமாபுரத்தில் விரும்பியிருக்கும் சிவனை சிவநெறி காட்டும் ஞானசம்பந்தரால் ஆக்கப்பட்ட தமிழ்ப் பாக்களால் ஓதவல்லவர்கள் தங்கள் பழவினைகளை போக்கிக் கொள்ளுதல் எளிதாம். இப்பாக்களால் சிவபிரானைத் துதித்தலின் பலன் கூறியவாறு.

**அருநெறியமறை வல்லமுனியகன் பொய்கையலர்மேய**
**பெருநெறியபிர மாபுரமேவிய பெம்மானிவன்றன்னை**
**ஒருநெறியமனம் வைத்துணர்ஞானசம் பந்தன்னுரைசெய்த**
**திருநெறியதமிழ் வல்லவர்தொல்வினை தீர்தல்எளிதாமே.**

திருஞானசம்பந்தப் பிள்ளையார் தமது இளம்பருவத்தில் நிகழ்ந்த இவ்வற்புத நிகழ்ச்சியை பின்னொரு காலத்தில் நினைத்து போற்றும் நிலையில், தாம் பாடிய திருப்பதிகமொன்றில் குறிப்பிடுகிறார். இவர் தலயாத்திரையாகப் பல தலங்களையும் பாடிச்சென்று வந்த காலை மதுரையம்பதியில் தங்கிய வேளையில் இவரது தந்தையார், இவரைக் காணும்பொருட்டு மதுரையம்பதிக்கு எழுந்தருளுகின்றார். தந்தையாரைக்கண்ட பிள்ளையார், சீர்காழிப்பதியில் எழுந்தருளிய இறைவனது நலத்தினை, 'மண்ணில் நல்ல வண்ணம்' எனும் பதிகத்தைப் பாடி வினவும் விதமாக உள்ளது. அப்பதிகத்தின் இரண்டாவது பாடல்.

**"போதையார் பொற்கிண்ணத் தடிசில் பொல்லாதெனத்**
**தாதையார் முனிவுறத் தானெனை யாண்டவன்**
**காதையார் குழையினன் கழுமல வளரகர்ப்**
**பேதையா ளவளொடும் பெருந்தகை யிருந்ததே"**

# திருஞானசம்பந்தர்

அழகிய பொற்கிண்ணத்திலே ஊட்டியருளிய பாலடிசில் பொல்லாதென்று கூறித் தந்தையார் வெகுளும்படி என்னை ஆட்கொண்டருளிய பிரமபுரத்து இறைவனாகிய பெருந்தகை பிராட்டியுடன், கழுமல வளநகரில் எழுந்தருளியிருக்கின்றதா? எனத் தன் தந்தையை நோக்கி கேட்பதாக அமைந்தது.

அறியாப்பருவத்தில் இறைவன் அம்மையப்பனாக எழுத்தருளி வந்து தமக்கு ஞானப்பாலளித்து ஆட்கொண்டமையும் அதனை உணராத தந்தை வெகுண்டு உரைத்த அழகிய நிகழ்ச்சியினையும் பிள்ளையார் மேற்கண்ட பாடலில் தெளிவாகக் கூறதல் கண்டு, தெளிந்து, அக்காழிவேந்தன் காட்டிய வழியில், ஐந்தெழுத்தை மனதில் நிறுத்தி, அம்மையப்பனான எம்பெருமானை அடைய, அவனருளைப் பெற, நல்வழி அவன் நாமத்தைச் சிந்தை செய்வது என்பதனைக் கீழ்கண்ட அவரது பாடல் தெள்ளென விளக்குகிறது.

**“காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி**<br>
**ஓதுவார் தமை தன்னெறிக்கு உய்ப்பது**<br>
**வேத நான்கினும் மெய்ப்பொருளாவது**<br>
**நாதன் நாமம் நமச்சிவாயவே”**

மனம் இரங்கி அன்புடன் சிவபிரானை நினைந்து கண்ணில் நீர் மல்க, ரிக், யஜுர், சாம, அதர்வண வேதமான நான்கிலும் கூறப்பட்டதான உண்மைப் பொருள் எனப்பட்டதான ஐந்து எழுத்தான ‘நமச்சிவாய’ எனும் நாமத்தை எவர்கள் ஓதுகிறார்களோ, அவர்களை அந்நாமம், நல்ல நெறிக்கு அழைத்து செல்ல வழிகாட்டியாக இருக்கும்.

இறைவனது திருவருட் பெருமையினை உலக மக்கள் உணர்ந்து போற்றும்படி வியப்புடைய அருட்செயல்கள் பல நிகழும் வண்ணம் பாடப்பெற்ற திருப்பதிகங்களை அற்புதத்திருப்பதிகங்கள் எனப் போற்றுவர். சீர்காழியின் அம்மையப்பரால் ஞானப்பால் ஊட்டப் பெற்று அற்புதமாக “தோடுடைய செவியன்: பதிகம் பாடிய மூன்றே வயது நிரம்பப் பெற்ற சம்பந்தப் பெருமானால் இன்னும் பல அற்புத நிகழ்ச்சிகள் நடத்தப்பட்டன.

அவையாவன: -

1. திருக்கோலக்காவில் ‘மடையில் வாளை’ பதிகம் பாட இறைவன் அவருக்கு ஐந்தெழுத்துப் பொறித்த பொற்றாளம் கொடுத்தருளுகிறார்.

2. திருஅரத்துறையில் சிவபெருமானால் முத்துச் சிவிகையும், முத்துக்குடையும், முத்துச் சின்னங்களும் கொடுத்தருளப் பெற்றார்.

3. திருப்பாச்சிலாச்சிராமத்தில் கொல்லி மழவன் எனும் அரசனது புத்திரிக்கு கண்டிருந்த முயலகன் எனும் நோயைப் பரமசிவன் மீது பதிகம்பாடி தீர்த்தருளினார்.

4. திருப்பட்டீச்சுரத்தில் சிவபிரான் சிவ பூதங்களால் இவருக்கு முத்துப்பந்தல் இடுவித்தார்.

5. திருவாவடுதுறையில் இவர் தந்தை யாகஞ் செய்யப் பொருள் கேட்க ஞானசம்பந்தர் வேண்ட சிவபிரான் இவருக்கு எடுக்க எடுக்கக் குறையாத பொன் முடிச்சு ஒன்று கொடுத்தருளினார்.

6. திருமருகலில் சர்ப்பத்தால் கடிக்கப்பட்டு இறந்த ஓர் வணிகனை பரமசிவத்தின் மேல் பதிகம் ஓதி உயிர்ப்பித்தார்.

7. திருவீழிமிழலையில் பஞ்சத்தால் யாவரும் வருந்த சிவனடியார்கல் வருந்தாவண்ணம் இவர் ஓதிய பாக்களால் சிவபிரான் படிக்காசு கொடுத்தருளினார்.

8. திருமுறைக்காட்டில் வேதம் பூசித்து மூடிப்போன கோயிற் கதவை திருநாவுக்கரசரால் திறக்கச் செய்து, அதனை மூடும்படி தாம் பதிகம் பாடியருளினார்.

9. மதுரையில் சமணமதம் அதிகரித்து அப்போதிருந்த கூன்பாண்டிய மன்னனும் அதை அனுசரிக்க, அரசி மங்கையர்க்கரசியாரும் அமைச்சரும் மன்னர் மனம் மாறவேண்டும் எனச் சம்பந்தரை வேண்டி வரவழைக்க அதை ஏற்று மதுரையம்பதிக்கு சென்று ஓர் மடத்தில் தங்க, இதை அறிந்த சமணர்கள் அம்மடத்திற்கு தீ இட, இது கண்ட சம்பந்தர் அத்தீ அரசனைப்பற்றுமாறு ஏவ, அது அரசனின் மேனியில் சுரநோயாய்ப் பற்றியது. மந்திர தந்திரங்கள் ஔடதங்கள் வீண் முயற்சியாயிற்று. அரசியும் அமைச்சரும் சம்பந்தரை வேண்ட இவர் சென்று திருநீற்றுப் பதிகமோதி அந்நோயைத் தீர்த்தருளினார்.

10. அனல் வாதம்: - சமணர்கள் தங்கள் உண்மைப் பொருளை ஓர் ஏட்டில் எழுதித் தீயிலிட அது எரித்து சாம்பலானது. பிள்ளையார் “போகமார்த்த பூண் முலையாள்” எனும் பதிகம் எழுதப்பட்ட ஏட்டைத் தீயிலிட அது வேகாமல் பச்சையாய் இருந்தது.

11. புனல் வாதம்: - சமணர்கள் தம் உண்மைப்பொருளை எழுதிய ஏட்டை புனலில் இட அதை வெள்ளம் அடித்துச் சென்றது. சம்பந்தப் பெருமான் “வாழ்க அந்தணர்” எனும் பதிகத்தை எழுதி ஏட்டை வைகையாற்றில் இட, அவ்வேடு வெள்ளத்தினை எதிர்த்துச் சென்று திருவேடகம் எனும் தலத்தில் கரை சேர்ந்தது,

அப்பாடலில் ‘வேந்தனும் ஓங்குக’ எனப்பாட கூன்பாண்டிய மன்னனது கூனும் நிமிர்ந்தது.

12. திருக்கொள்ளம்பூதூரில் “கொட்டமே கமழும்” எனும் பதிகம் பாடி ஓடத்தைத் தனது பக்திப் பாவாலேயே எதிர்கரை சேரச் செய்தார்.

13. திருத்தளிச்சேரிக்குப் போகும் வழியில் போதி மங்கை எனும் கிராமம் உள்ளது. இங்கு புத்த நந்தி என்பவன் சம்பந்தரையும் அடியார்களையும் தடுக்க ‘புத்தர் சமண் கழுக்கையர்’ எனும் பாடலை பஞ்சாக்கரத் திருப்பதிகத்தினின்றும் சம்பந்தரின் அடியார்களுள் ஒருவரான சம்பந்த சரணாலயர் என்பவர் பாட, புத்தநந்தி இடி வீழ்ந்து இறந்தனன். பின்னர் சாரி புத்தன் என்பவன் வாதம் செய்து தோற்றபின் எல்லாப் பௌத்தர்களும் சைவராயினர்.

14. திருவோத்தூரில் “பூத்தேர்ந்தாயன” எனும் பதிகம் பாடி ஆண்பனையை பெண்பனையாக்கினார்.

15. மயிலாப்பூரில் அரவம் தீண்டி இறந்த சிவநேசச் செட்டியாரின் பெண்ணை “மட்டிட்ட புனனையங்கானல்” எனும் பதிகம்பாடி உயிர்பெறச் செய்தார்.

16. சம்பந்தப்பெருமான் தனது பதினாறு வயதில் திருமணம் நிகழ்ந்த காலத்தில் நல்லூர்ப் பெருமணம் எனும் தலத்தில் இவ் இல்வாழ்க்கை வந்து சேர்ந்ததே என வருத்தமுற்று இறைவனை நினைந்து “கல்லூர் பெருமணம் வேண்டா கழுமலம்” எனும் பதிகம் பாட, இறைவன் சோதி வடிவாகத் தோன்றி அதனுள் ஓர் வாயிலைக்காட்ட சம்பந்தப்பெருமான் நமச்சிவாயப் பதிகத்தை ஓதித் தன் திருமணங்காண வந்தவர்களையும் உற்றார் உறவினர்களையும் அச்சோதியினுள் ஏகும்படிப் பணிந்து தானும் தன் மனைவியுடன் அச்சோதியினுள் புகுந்து இறைவனுடன் கலந்தருளினார்.

இவ்வாறு தனது மூன்றாவது வயது முதல் தொடங்கி இறைவனைப் பாடத்தொடங்கிய சம்பந்தப் பெருமானார் தனது பதினாறாம் வயதில் நல்லூற் பெருமணம் எனும் தலம் முடிய பதினாறாயிரம் பதிகங்கள் பாடியிருப்பினும், நாம் செய்த நற்றவப்பயன்களால் முன்னூற்று எண்பத்து நான்கு பதிகங்களாவது கிடைக்கப் பெற்று அவற்றின் பொருளுணர்ந்து இறைவனது அருளைப்பெற வழிகாட்டியாக அமைந்துள்ளன. அவையாவும் எல்லாம் வல்ல எம்பிரானின் உரை எனக் கொள்ள வேண்டும் என்பதற்குச் சான்றாக ஞானசம்பந்தரின் திருஇலம்பையங்கோட்டூர் பதிகம் உள்ளது. அப்பதிகப் பாடல்களில் ‘எனதுரை தனதுரையாக’ எனும் வரும் தொடரால் இவர் பாடிய பாக்கள் யாவுமே நமச்சிவாய மூர்த்தியின் அருள் மொழிகளே எனத் தெள்ளத் தெளிகின்றோம்.

# திருஞானசம்பந்தர்

திருஞானசம்பந்தர் சீர்காழியில் தீர்த்தக்கரையில் ஞானப் பாலுண்டு “தோடுடைய செவியன்” எனத்தொடங்கும் திருப்பதிகம் பாடியது மூன்றாவது பிராயத்தில் ஆகும். ஆனால் சேக்கிழார் பெருமான் அந்த ஞானக்குழந்தையின் வளரும் ஒவ்வொரு பருவத்திலேயும் அவர் பெற்ற அருளின் திறத்தைத் தாதிமார்களின் வாயிலாகக் காட்டுகின்றார். அவர் கூறுவதாவது: -

**சூழவரும் பெருஞ்சுற்றத் தோகையரும் தாதியரும்**
**“காழியர்தஞ் சீராட்டே கவுணியர்கற் பகமே” என்(று)**
**ஏழிசையும் பலகலையும் எவ்வுலகுந் தனித்தனியே**
**வாழவரும் அவர்தம்மை “வருகவரு” கென அழைப்ப.**

இது குழந்தையின் பத்து அல்லது பதினோரு மாதங்களில் நிகழும் வருகைப்பருவத்தின் நிகழ்ச்சியாகும். தளர்நடை போடும் குழந்தையாம் திருஞானசம்பந்தரை சுற்றத்தாராகிய மறைக்குல மகளிரும், தாதியரும் “கவுணியர் குலத்தவரின் கற்பகமே! ஏழிசையும் வேதமுதலான பலகலைகளும் எல்லா உயிர்களும் தனித்தனியே வாழும்படி வந்தவதரித்த பிள்ளையாரே! வருக! வருக! என அழைக்கின்றனராம்.

“ஏழிசையும் வாழ்வது எவ்வாறு? ஏழு இசைகளும் வேறு அழியக்கூடிய பொருள்களிடத்து இசைந்து ஒழியாது பிள்ளை யாரது திருப்பதிகங்கட்கு உட்பட்டுச் சிவன் புகழ்பாடும் தன்மைக்கு மட்டுமே பயன்பட்டது என்று அறிய வேண்டும். எக்கலையுமே இறைவனின் புகழையும் பெருமையையும் விவரிக்கும் தன்மைக்கே பயன்படின், அவனருளாலே அவ்வாறு செயல்படுத்துபவரின் திறமையும் அக்கலையின் திறமையும் பெருமையும் பன்மடங்கு பெருகி இவ்வுலகு உள்ளளவும் நிலைத்து நிற்கும் என்பது உறுதி. தேவார ஆசிரியர்களான திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவருமே செந்தமிழைப் படகாகவும், இசைக்கலையினைத் துடுப்பாகவும் கொண்டு பக்திக்கடலில் பயணஞ் செய்தனர். மூவரும் விதைத்த இசைக்கலை என்னும் வித்து முளைத்துச் செடியாகி இன்று பலவாறு விழுதுவிட்டு ஆலமரமாகப் பிற்காலத்தவர்களால் வளர்க்கப்பட்டது. அவர்கள் இசையில் இறைவனைக் கண்டனர். திருஞானசம்பந்தர் “பண் காட்டும் இசையான்” எனவும், “பண்ணில் யாழினர்” எனவும், “பரசுபாணியர் பாடல் வீணையர்” எனவும்; திருநாவுக்கரசர் இறைவனை “பண்ணார்த்த வீணைபயின்ற விரலவனே” எனவும் “கீதராய் கீதங்கேட்டு” எனவும், “புண்ணியன்” எனவும்; சுந்தரர் “ஏழிசையாய் இசைப்பயனாய்” என்று பாடியமையால் அவர்கள் இசையினூடே இறைவனைக் கண்டமை தெளிவாகின்றது.

அசுவதான், கம்பளன், என்னும் இரு கந்தர்வர்களுடைய இசையை விரும்பி அவர்கள் விரும்பியவாறே அவர்களை தோடும் குழையுமாக இறைவன் அணிந்துள்ளளான் என்பது வரலாறு. இவ்வாறான இறைவனது பெருமைகளைச் சீர்காழியில் பாடத்தொடங்கிய திருஞானசம்பந்தப் பெருமான் மீண்டும் கோயிலினுள் சென்று அம்மையப்பரைப் பணிந்து விருப்பமுடன் "நறவ நிறை வண்டு" எனத் தொடங்கும் பதிகத்தைத் தக்கேசிப் பண்ணில் பாடியருளினார். அப்பதிகத்தை உரையுடன் ஈண்டுத் தருகின்றோம்.

திருச்சிற்றம்பலம்.

1. **நறவநிறைவண் டறைதார்க்கொன்றை நயந்து நயனத்தால்**
**சுறவஞ்செறிவன் கொடியோன்உடலம் பொடியாவிழி செய்தான்**
**புறவம்உறைவன் பதியாமதியார் புரமூன்றெரிசெய்த**
**இறைவன் அறவன் இமையோரேத்த உமையோடிருந்தானே**.

**பதிகப்பொழிப்புரை: -** தேன் நிறைந்ததும், வண்டுகள் ஒலிக்கின்றதுமான கொன்றை மாலையை விரும்பி அணிந்து, மீனக்கொடியோனான மன்மதனை அவனது உடல் நீறாகும்படி நெற்றிக்கண்ணால் விழித்தலைச் செய்தவனும், பகைவரது மூன்று புரங்களையும் எரிசெய்த இறைவனும், அறமே உருவானவனுமாகிய சிவபெருமான் புறவம் என்னும் பெயருடைய வளமான சீர்காழியினைத் தனது உறைவிடமாகக் கொண்டு இமையவர்கள் எல்லாம் துதித்துப் போற்றும்படி உமாதேவியாரோடு எழுந்தருளி இருந்தான்.

2. **உரவன்புலியின் உரிதோலாடை உடைமேற்படநாகம்**
**விரவிவிரிபூங் கச்சரவசைத்த விகிர்தன்னுகிர்தன்னால்**
**பொருவெங்களிறு பிளிறவுரித்துப் புறவம்பதியாக**
**இரவும்பகலும் இமையோரேத்த உமையோடிருந்தானே.**

வலிமைமிக்க புலியினை உரித்த தோலாடையின் மீது பாம்பினைப் பூங்கச்சு போன்று இடையினில் விரவி உடுத்த விகிர்தனாகிய சிவபெருமான், போரிடவந்த கொடிய யானையினை அலறிப்பிளிறும்படியாகத் தனது நகத்தினால் உரித்துத் தோலினைப் போர்த்திக் கொண்டு, இரவும் பகலும் தேவர்கள் ஏத்தும்படிப் புறவம் என்னும் சீர்காழியினைத் தனது பதியாகக்கொண்டு உமையம்மையோடு எழுந்தருளியிருந்தான்.

3. **பந்தமுடைய பூதம்பாடப் பாதஞ்சிலம்பார்க்கக்**
**கந்தமல்கு குழலிகாணக் கரிகாட்டெரியாடி**
**அந்தண்கடல்சூழ்ந் தழகார்புறவம் பதியாவமர்வெய்தி**
**எந்தம்பெருமான் இமையோரேத்த உமையோடிருந்தானே.**

இறைவனை என்றும் நீங்காது தொண்டு புரிதலாகிய பந்த த்தினையுடைய பூதங்கள் பாடவும், திருப்பாதங்களில் சிலம்புகள் ஒலிக்கவும், மணம் மிக்க கூந்தலையுடைய உமாதேவியார் காணவும் சுடுகாட்டிலே ஆடுதலைச் செய்த பிரான், அழகிய குளிர்ச்சி மிக்க கடல் சூழ்ந்து அழகுபொருந்திய திருப்புறவமே பதியாக விரும்பியிருந்து, இமையோர்கள் ஏத்தித்துதிக்க உமையம்மையாரோடு எழுந்தருளி இருந்தனன்.

4. **நினைவார்நினைய இனியான்பனியார் மலர்தூய்நித்தலும்**
**கணையார்விடையொன் றுடையான்கங்கை திங்கள்கமழ் கொன்றை**
**புனைவார் சடையில் முடியான்கடல்சூழ் புறவம்பதியாக**
**எனையாளுடையான் இமையோரேத்த உமையோடிருந்தானே.**

தினந்தோறும் குளிர்ச்சி பொருந்திய மலர்களைத் தூவி (அருச்சித்து) தன்னை நினைப்பவர்களது நினைவுக்கு இனிமையைக் கொடுப்பவன். ஒலித்தலைச் செய்கின்ற ஒரு எருதினை வாகனமாக உடையவன். திங்களும், மணம் வீசுகின்ற கொன்றையினையும் அணிந்த சடைமுடியினை உடையவன். என்னை ஆளாக (அடியவனாக) உடைய இந்தப் பெருமான் புறவமே பதியாகக் கொண்டு தேவர்கள் துதித்தலைச் செய்ய உமாதேவியாரோடு எழுந்தருளி இருந்தனன்.

5. **செங்கணரவும் நகுவெண்டலையும் முகிழ்வெண்டிங்களும்**
**தங்குசடையன் விடையனுடையன் சரிகோவணவாடை**
**பொங்குதிரைவண் கடல்சூழ்ந்தழகார் புறவம்பதியாக**
**எங்கும்பரவி இமையோரேத்த உமையோடிருந்தானே.**

சிவந்த கண்ணினையுடைய பாம்பு, நகைத்துவந்த வெண்டலை, இளமையும் வெண்மையுமுடைய சந்திரன் ஆகியவைகள் தங்குகின்ற சடையினையுடையவன். எருதினை ஊர்தியாகவுடையவன். பொங்குகின்ற அலைகளையுடைய கடல் சூழ்ந்து அழகு பொருந்திய புறவம் என்னும் சீர்காழிப்பதியைத் தனது இடமாகக் கொண்டு தேவர்கள் எங்கும் பரவியிருந்து துதித்தலைச் செய்ய உமாதேவியாரோடு எழுந்தருளியிருதனன்.

6. **பின்னுசடைகள் தாழக்கேழல் எயிறுபிறழப்போய்**
**அன்னநடையார் மனைகள்தோறும் அழகார்பலிதேர்ந்து**
**புன்னைமடலின் பொழில்சூழ்ந்தழகார் புறவம்பதியாக**
**என்னையுடையான் இமையோரேத்த உமையோடிருந்தானே.**

என்னை ஆளாகவுடைய பெருமான் பின்னிய சடைகள் தாழப் பன்றியின் கொம்பு மார்பில் விளங்க, அன்னம் போன்ற நடையினையுடைய பெண்களின் வீடுகள் தோறும் அழகுடன் சென்று பிச்சையெடுத்துப் புன்னை மரங்கள் நிறைந்த

பொழில்கள் சூழ்ந்த திருப்புறாவத்தினைத் தனது பதியாகக் கொண்டு, தேவர்கள் ஏத்தித்துதிக்கும் படியாக உமாதேவி யாரோடு எழுந்தருளியிருந்தனன்.

7. **உண்ணற்கரிய நஞ்சையுண்டு ஒருதோழந்தேவர்**
**விண்ணிற்பொலிய அமுதமளித்த விடைசேர் கொடியண்ணல்**
**பண்ணிற்சிறைவண்டு அறைபூஞ்சோலைப் புறவம்பதியாக**
**எண்ணிற்சிறந்த இமையோரேத்த உமையோடிருந்தானே.**

எவராலும் உண்ணுதற்கரிய விஷத்தினைத்தான் உண்டு பேரெண்ணாகிய முப்பத்து முக்கோடி தேவர்கள் விண்ணுலகைத் தமது இடமாகக்கொண்டு போகத்தில் மூழ்கி விளங்கும்படி அவர்கள் அமுதம் உண்ணும்படி அருள் செய்த இடபக்கொடியோனாகிய சிவபெருமான், இறகுகலையுடைய வண்டுகள் பண்ணோடும் ஒலிக்கின்ற பூஞ்சோலைகள் நிறைந்து திருப்புறவத்தினைத் தமது பதியாகக் கொண்டு எண்ணிக்கையில் மிக்க தேவர்கள் துதிக்கும்படி உமாதேவியாரோடு எழுந்தருளியிருந்தனன்.

8. **விண்தான் அதிர வியனார்கயிலை வேரோடெடுத்தான்தன்**
**திண்தோளுடலும் முடியுநெரியச் சிறிதேயூன்றிய**
**புண்தான்ஒழிய அருள்செய்பெருமான் புறவம்பதியாக**
**எண்தோளுடையான் இமையோரேத்த உமையோடிருந்தானே.**

விண்ணகம் முழுவதும் அதிரும்படி இடமகன்ற திருக்கயிலை மலையினை வேரோடு எடுப்பேன் என முயன்ற இராவணனுடைய திண்மையான தோள்களும், உடலும் தலைமுடிகள் பத்தும் தெரியும்படி மிகச்சிறிய அளவிலே விரலையூன்றி, அதனால் அவனுக்கு ஏற்பட்ட புண்ணும் நீங்கும்படிப் பின்னர் அவனுக்கு அருள் செய்த சிவபெருமான் எட்டுத்தோள்களையுடையானாகிய அவன் திருப்புறவம் பதியாகக்கொண்டு தேவர்கள் எத்தித்துதிக்க உமையம்மையாரோடு எழுந்தருளி இருந்தனன்.

9. **நெடியான்நீள்தா மரைமேலயனும் நேடிக்காண்கில்லாப்**
**படியாமேனி உடையான்பவள வரைபோல் திருமார்பில்**
**பொடியார்கோலம் உடையான் கடல்சூழ் புறவம்பதியாக**
**இடியார்முழவார் இமையோரேத்த உமையோடிருந்தானே.**

நெடியானாகிய திருமாலும் மலர்மேல் உள்ளவனாகிய பிரம்மதேவனும் எவ்வளவோ தேடியும் காணமுடியாத அடங்காத அழல் உருவாகிய திருமேனியன். பவளமலை போன்ற மார்பின் மீது திருநீற்றினைத் தரித்த அழகன். கடல் சூழ்ந்த திருப்புறவத்தினைத் தனது பதியாகக் கொண்டு, இடிபோல் ஒலிக்கும் முழவுகளைக்

கைகளில் கொண்டவராய்த் தேவர்கள் ஏத்தித்துதிக்க உமாதேவியாரோடு எழுந்தருளி இருந்தனன்.

10. **ஆலும்மயிலின் பீலியமணர் அறிவில்சிறுதேரர்**
**கோலும்மொழிகள் ஒழியக்குழுவும் தழலுமெழில்வானும்**
**போலும்வடிவும் உடையான்கடல்சூழ் புறவம்பதியாக**
**ஏலும்வகையால் இமையோரேத்த உமையோடிருந்தானே.**

ஆடுத்தன்மையினையுடைய மயிலின் பீலிகளைக் கையிற் கொண்ட சமணர்களும், சிற்றறிவுடையவர்களான பவுத்தர்களும் புனைந்து இயற்றிய வார்த்தைகள் பிற்பட்டு நிற்க, கூடி எரியும் தழலும் எழில் வானும் ஒத்த வடிவமுடையவனாகிய சிவபெருமான், கடல்சூழ்ந்த திருப்புறவத்தினைத் தனது இருப்பிடமாகக் கொண்டு, இயன்ற வகையால் தேவர்கள் ஏத்தித் துதிக்கும்படியாக உமாதேவியாரோடு எழுந்தருளியிருந்தனன்.

11. **பொன்னார்மாட நீடுஞ்செல்வப் புறவம்பதியாக**
**மின்னாரிடையாள் உமையாளோடும் இருந்தவிமலனைத்**
**தன்னார்வஞ்செய் தமிழின்விரகன் உரைத்தமிழ்மாலை**
**பன்னாள்பாடி ஆடப்பிரியார் பரலோகந்தானே.**

அழகு பொருந்திய மாடங்கள் நிறைந்து செல்வங்கள் மிக்க திருப்புறவம் என்னும் சீர்காழிப்பதியினைத் தனது பதியாகக் கொண்ட மின்னலையொத்த இடையினையுடைய உமாதேவியாரோடு கோயில் கொண்டிருந்த விமலனாகிய சிவபெருமானை, பொங்கி எழும் அன்பினை மேலும் விளைவிக்கின்ற, தமிழ்விரகனாகிய திருஞானசம்பந்தனது தமிழ் மாலையினைப் பலநாட்கள் பாடியாடுவார் பரலோகத்தினைப் பிரியாது என்றும் அங்கேயே இருப்பர். அதாவது மீண்டும் பூமியில் வந்து பிறவார் என்றருளிச் செய்தனர் என்க.

இவ்வாறு திருக்கடைக்காப்பு சாத்தியபின் முறையோடு பாடும் அருள் பெற்ற ஞானக்குழந்தை சம்பந்தர் கோயிலினின்றும் புறப்பட்டதைச் சேக்கிழார் பெருமான்,

“இன்னிசை ஏழும் இசைந்த செழுந்தமிழ் ஈசற்கே
சொன்முறை பாடு தொழும்பருள் பெற்ற தொடக்கோடும்
பன்மறை வேதியர்காண விருப்பொடு பால்நாறும்
பொன்மனி வாயினர் கோயிலி னின்று புறப்பட்டார்.”

என்று விவர்க்கின்றார்.

இங்கு “இன்னிசையோடு மிசைந்த செழுந்தமிழ்” என்றது இவரது திருப்பாடல்கள் ஈசனைக்குறித்தமையால் ஏழிசையும் முயற்சியின்றி தானாகவே

செந்தமிழோடு பொருந்தி இயைந்துவிட்டது என்பதாகும். இவ்வருட்திறத்தினைச் சேக்கிழார் பெருமான்.

“காழியர் தவமே கவுணியர் தனமே கலைஞானத்(து)
ஆழிய கடலே அதனிடை அமுதே அடியார்முன்
வாழிய வந்திம் மண்மிசை வானோர் தனிநாதன்
ஏழிசை மொழியாள் தந்திரு வருள்பெற் றனைஎன்பார்,”

என்ற பாடலில் திருஞானசம்பந்தரைக் காழியர்களின் தவப்பயனாகவும் கவுணியர்களின் குலதனமாகவும் கலைஞானப் பெருங்கடலாகவும், அக்கடலின் அமுதமாகவும், முன்அடியார்கள் வாழும்பொருட்டு இப்புவியில் அவதரித்துவந்து தேவர்களின் தனிநாயகனான சிவபெருமான் - இறைவியான எழிசை மொழியான் என்ற இருவருடைய திருவருளையும் ஒருங்கே பெற்றவராகவும் புகழ்ந்துரைக்கின்றார். கோயிலினுள் பாடிய பதிகத்தின் ஒவ்வ்ப்ரு பாடலிலும் இறைவனை “உமையோடு இருந்தானே” எனக்கூறுவது தமக்குப் பொற்கிண்ணத்தில் பாலூட்டிய உமையம்மையின் கருணையை நினைவில் கூர்ந்தவாறு சீர்காழி ஆலயத்தில் இறைவர்க்கு மூன்று சந்நதிகள் இருந்தும் அவர் தோணியப்பராக பெரியநாயகி ஸமேதராக எழுந்தருளியுள்ள சந்நதியின்முன் பாடிய பதிகமோ எனத் தோன்றுகிறது.

திருக்கோயில் வழிபாட்டின் முக்கியத்துவத்தினை உலகிற்கு உணர்த்தவும் அதை வெளிப்படுத்திக்காட்டவும் வந்த பரமாசாரியர் ஆதலால் அருள்பெற்ற மறுநாள் தமது முதல்யாத்திரையாகச் சோழநாட்டில் காவிரியின் வடகரையிலுள்ள திருக்கோலக்காவுக்கு எழுந்தருளினார். அங்கு “மடையில் வாளைபாய” எனத்தொடங்கும் திருப்பதிகத்தைத் தமது சிறுகைகளால் தாளமிட்டபடி பாடியதைக்கண்டு இரங்கி இறைவர் திருவைந்தெழுத்து எழுதப்பட்ட செம்பொற்தாளத்தினைச் சம்பந்தர்க்கு அருளி அதற்கு இறைவியாரால் ஓசையும் கொடுத்தருளினார். ஆளுடையநம்பிகளும் இவ்வற்புத நிகழ்ச்சியை “இன்னிசையால் தமிழ்பரப்பும் ஞானசம்பந்தர்க்கு உலகவர் முன்தாளம் ஈந்த தன்மையானன்” எனப் போற்றிப் பரவியுள்ளார். இதனைச் சேக்கிழார் பெருமான்,

“கையதனால் ஒத்தறுத்துப் பாடுதலுங்
　　கண்டருளிக் கருணை கூர்ந்த
செய்யசடை வானவர்தம் அஞ்செழுத்தும்
　　எழுதியசெம் பொற்றா ளங்கள்
ஐயரவர் திருவருளால் எடுத்தபா
　　டலுக் கிசைந்த அளாவல் ஒத்த
வையமெலாம் உய்யவரு மறைச்சிறுவர்

கைத்தலத்து வந்த வன்றே.”

என்ற பாடலால் கூறுகின்றார். இனி, தக்கராகப் பண்ணில் அமைந்த அவ்வற்புதப்பதிகத்தையும் பொருளோடு நோக்குவோம்.

திருச்சிற்றம்பலம்

1. **மடையில் வாளை பாய மாதரார்**
**குடையும் பொய்கை கோலக் காவுளான்**
**சடையும் பிறையுஞ் சாம்பற் பூச்சுங்கீழ்**
**உடையுங் கொண்ட வுருவ மென்கொலோ.**

2. **பெண்டான் பாக மாகப் பிறைச்சென்னி**
**கொண்டான் கோலக் காவு கோயிலாக்**
**கண்டான் பாதம் கையாற் கூப்பவே**
**உண்டான் நஞ்சை உலகம் உய்யவே.**

3. **பூணற் பொறிகொள் அரவம் புன்சடை**
**கோணற் பிறையன் குழகன் கோலக்கா**
**மாணப் பாடி மறைவல் லானையே**
**பேணப் பறையும் பிணிக ளானவே.**

4. **தழுக்கொள் பாவந் தளர வேண்டுவீர்**
**மழுக்கொள் செல்வன் மறிசே ரங்கையான்**
**குழுக்கொள் பூதப் படையான் கோலக்கா**
**இழுக்கா வண்ணம் ஏத்தி வாழ்மினே.**

5. **மயிலார் சாயல் மாதோர் பாகமா**
**எயிலார் சாய எரித்த எந்தைதன்**
**குயிலார் சோலைக் கோலக் காவையே**
**பயிலா நிற்கப் பறையும் பாவமே.**

6. **வெடிகொள் வினையை வீட்ட வேண்டுவீர்**
**கடிகொள் கொன்றை கலந்த சென்னியான்**
**கொடிகொள் விழவார் கோலக் காவுளெம்**
**அடிகள் பாதம் அடைந்து வாழ்மினே.**

7. **நிழலார் சோலை நீல வண்டினங்**
**குழலார் பண்செய் கோலக் காவுளான்**
**கழலால் மொய்த்த பாதங் கைகளால்**
**தொழலார் பக்கல் துயர மில்லையே.**

8. **எறியார் கடல்சூழ் இலங்கைக் கோன்றனை**
**முறியார் தடக்கை அடர்த்த மூர்த்திதன்**
**குறியார் பண்செய் கோலக் காவையே**
**நெறியால் தொழுவார் வினைகள் நீங்குமே.**

9. **நாற்ற மலர்மேல் அயனும் நாகத்தில்**
**ஆற்ற லணைமே லவனுங் காண்கிலாக்**
**கூற்ற முதைத்த குழகன் கோலக்கா**
**ஏற்றான் பாதம் ஏத்தி வாழ்மினே.**

10. **பெற்ற மாசு பிறக்குஞ் சமணரும்**
**உற்ற துவர்தோ யுருவி லாளருங்**
**குற்ற நெறியார் கொள்ளார் கோலக்காப்**
**பற்றிப் பரவப் பறையும் பாவமே.**

11. **நலங்கொள் காழி ஞானசம் பந்தன்**
**குலங்கொள் கோலக் காவு ளானையே**
**வலங்கொள் பாடல் வல்ல வாய்மையார்**
**உலங்கொள் வினைபோய் ஓங்கி வாழ்வரே.**

1. (பொருள்) மாதர்கள் நீராடுவதால் வாளைமீன்கள் துள்ளும் பொய்கைக் கரையிலுள்ள திருக்கோலக்காவில் எழுந்தருளிய இறைவன், சடையையும் பிறையையும் தாங்கிச் சாம்பலையும் பூசி கீழுடையுடன் இருக்கின்ற திருக்கோலத்தின் காரணம் யாதோ?

2. உமையொரு பாகனாகப் பிறையைச் சென்னியில் அணிந்தவனுமாக திருக்கோலக்காவில் எழுந்தருளியுள்ள இறைவன் எல்லோரும் தொழும்படி உலகம் உய்ய நஞ்சை உண்டனன்.

3. படமுடைய பாம்பினைப் பூணாகவும் சடையினில் பிறையினையும் அணிந்தவனும் மறைவல்லானுமான இளமையான கோலக்காவில் வீற்றிருக்கும் இறைவனை இடைவிடாது பணிய பிணிகளெல்லாம் மறையும்.

4. நம்மைப் பற்றியிருக்கும் பாவம் தளர மழுப்படை உடைய செல்வனும் மானினைக் கையிலேந்தியவனும் பூதகணங்களை உடையவனுமாகிய கோலக்காவில் எழுந்தருளியுள்ள இறைவனைத் தவறாது தொழுது வாழுங்கள்.

5. மயிலையொத்த உமாபிராட்டியாரை ஒரு பாகமாகக் கொண்டவனும் திரிபுரமெரித்த எந்தையானவனும் சிவபெருமான் எழுந்தருளியுள்ள குயில்கள்

நிறைந்த சோலையுடைய கோலக்காவினை நினைக்க பாவங்களெல்லாம் பறந்து போகும்.

6. பெருகிவரும் வினைகளை நீக்க விரும்பும் மக்களே! கொன்றை மலரணிந்த சென்னியினையுடையவனும் விழாக்கள் பொருந்திய கோலக்காவினை இடமாகக் கொண்டவனுமான சிவபிரானது திருவடியைச் சரணடையுங்கள்.

7. நீலநிற வண்டுகள் குழலினையொத்த பண்ணொலிக்கும் கோலக்காவினை இடமாகக்கொண்டுள்ள எம்பெருமானின் கழலணிந்த பாதங்களைக் கைகளால் தொழுபவர்களின் பக்கத்தில் துயரம் நெருங்குவதில்லை.

8. அலைகள் வீசுகின்ற கடல்சூழ்ந்த இலங்கை மன்னன் இராவணனை அவனது இருபது தோள்களையும் நெரித்த மூர்த்தியும், அவன் பண்ணால் தொழ அவனுக்கு அருள்செய்தவனுமாகிய இறைவனுறைகின்ற கோலக்காவினை முறைப்படி தொழுபவர் வினைகள் யாவும் அகலுமே.

9. நறுமணம் பொருந்திய தாமரையில் தோன்றிய பிரம்மனும் பாம்பணையில் பள்ளிகொண்ட திருமாலும் காணவியலாதவனும், எமனை தண்டித்தவனுமாகிய குழகன் கோலக்காவினை இடமாகக்கொண்ட இறைவன் பாதங்களைத் தொழுது வாழ்வீரே!

10. தாங்களாகவே பெற்ற மாசுகளை மறையாது வெளிப்படுத்திக் கொள்ளும் சமணரும், காவியாடையால் தம் உருவம் மறைத்த புத்தசமயத்தினரும் பழுதுபட்ட நெறியினை உடையவர். இவர்கள் நெறியினைக் கொள்ளாது திருக்கோலக்காவைத் தொழ பாவங்கள் தொலையும்.

11. பல நலங்களைக்கொண்ட சீர்காழியில் பிறந்த ஞானசம்பந்தன் நற்குலம் நிறைந்து கோலக்காவினுறை இறையைப் பாடிய அருள் மிகக் கொண்ட பாடல்களைப் பாட வல்லார்கள் தமது வல்வினை யாவும் நீங்கப்பெற்று சிறப்புடன் வாழ்வர்.

இப் பதிகத்தைக் கேட்ட அளவில் தும்புரு நாரதர் முதலாகிய சுருதி பயில் இசைத்துறையில் வல்லவர்களாகிய தேவர்கள் யாவரும் போற்றித் துதித்து பூவுலகின் மேல் பூமழை பொழிந்தனர். சைவம் வாழும் பொருட்டு அவதரித்த பிள்ளையாரும் இறையருளை போற்றித் துதித்து அங்கிருந்து மீண்டும் சீர்காழிப் பதிக்குத் திரும்பினார். இதனைச் சேக்கிழார்,

உம்பருல கதிசயிப்ப ஓங்கியநா
தத்தளவின் உண்மை நோக்கித்

துப்புருநா ரதர்முதலாஞ் சுருதி இசைத்
துறையுள்ளோர் துதித்து மண்மேல்
வம்பலர்மா மழைபொழிந்தார் மறைவாழ
வந்தருளும் மதலை யாருந்
தம்பெருமான் அருள்போற்றி மிண்டருளிச்
சண்பைநகர் சாரச் செல்வார்.

எனும் பாடலில் விவரிக்கின்றார். இதில் 'உம்பருலகம் அதிசயிப்ப' என்பது இசையில் வல்ல தேவர்கள் பலரும் இருத்தலின் அவர்கள்பால் அறிந்த இசை விளக்கங்களுடன் மிகுந்து பிள்ளையாரது இசைப்பாடல் இருத்தலின் தேவர்கள் அதிசயித்தனர் என்பதனை உணரவேண்டும். ஞானசம்பந்தரும் தமது திருப்பந்தணைநல்லூர் பதிகத்தில் தன்னை, "நல்லிசையானன்" என்றும் "புல்லிசைகேளா நற்றமிழ் ஞானசம்பந்தன்" என்றும் குறிப்பிட்டிருப்பது அவ்வேழாம் நூற்றாண்டிலும் "புல்லிசை"யும் இருந்தது என்றும் அதனைப் பொருட்டாகக் கொள்ளாது இறைவனைத் துதிக்கவே இசையைப் பயன் படுத்தினார் என்பதும் நோக்கத்தக்கது.

திருக்கோலக்காவில் "மடையில் வாளை" பதிகத்தைப் பாடியருளும்பொழுது பொற்றாளம் தரப் பெற்றவராதலின் அதன்பின் சீர்காழிக்குத் திரும்பிப் பாடும் முதல் பதிகத்தில் அதே தக்கராகப் பண்ணில் அதே தாள இசையமைப்பில் பாடுவதற்கு மிக்க விருப்பம் கொண்டவராக "பூவார் கொன்றை புரிபுன் சடையீசா" எனத் தொடங்கும் பதினோரு பாடல்கள் அமைந்த பதிகத்தை பாடியருளினார். இவ்வாறு அருள்பெற்றுப் பாடும் தன்மை பெற்ற தம் நெஞ்சத்தை நோக்கி திருவலஞ்சுழி இறைவனை தரிசிக்கும்போது அவ்விறைவனை ஏத்தியும் பாடியும் வழிபட "என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே" என்று கேட்பதோடல்லாமல் இவ்வுலகத்தவரை தன்வழியே செலுத்த "காழிநாதன் வேதியன் ஞானசம்பந்தன் மாதோர் கூறனை நோக்கி நவிற்றிய தமிழ்மாலைகளை ஆதரித்து இசையைக் கற்றுணர்ந்த வல்லவர்கள் மூலம் சொல்லக் கேட்டு உகப்பவர்களுக்கு" வினைகள் தீண்டா என்று திருக்கடைக்காப்பும் சாத்துகிறார்.

சிவம்